# நஸீஹத்து மாலை

## வெண்பா

அருஷும் குருஷும் மற்றும் அறுநாளிலே அமைத்த
குறியுடை யோன் நாமம் கொண்டு - அறிவான
ஆனந்தக் காவியத்தை அன்பாகவே கிளர்த்த
கான்மலை தந்தோனே காப்பு

## ஆனந்தக் கலிப்பா

தீனிஸு லாமெங்கள் தீனே—எங்கள்
தீன்தீன் முஹம்மது தீனெங்கள் தீனே.

(கண்ணிகள்)

1. ஆலம் இருமூன்று நாளில் — நாடி
அன்பா யமைத்த பெரியோனைப் போற்றி
சீலம் சிறந்த நபிக்கு — என்றும்
சிறப்பாய் ஸலாத்தும் ஸலாமும் சொல்வேனே

2. வள்ளல் அபூபக்கர் தம்மை — இன்னும்
வரிசை உமருது மானலீ தம்மை
தெள்ளிய ரான ஹஸனை — நல்ல
சின்னர் ஹுஸைனைச் சிறப்பாய்ச் சொல்வேனே

3. மீரான் முஹிய்யத் தீன்தம்மை — மிக்க
மேலான ஷெய்கு மஃரூபு தம்மை
சீரான ஷெய்கு பிஷ்ஷரை — யானும்
திண்ணமாய் எண்ணித் துஆச் சொல்லுவேனே

4. தோன்றல் பிதா ஸாலே மானே — நல்ல
துலங்கும் எங்கள் தமை யர்ஷம்ஸுத்தீனே
ஆண்ட குரு அஹ் மதை — நல்ல
ஆலிம் ஸதக துல்லாவைச் சொல்வேனே

5. என்பின்ன ரான ஸலாஹை — இங்கு
இதமாகப் போற்றிஇக் காவியம் சொல்வேன்
தம்பிரான் பக்கலில் சென்ற — உயர்
சங்கைய ரப்துல் அஜீஸைப் புகல்வேன்

6. இவர்கள் துஆவின் பொருட்டால் — பாவி
எளியேன் சிலதன் நஸீஹத்துச் சொல்வேன்
தவனமாய்க் கேட்டு நடப்போர் — நாளைத்
தங்கப் பதியிற் புகுதுவர் கண்டீர்

7. ஈமான் இஸ்லா மறிந்து — நல்ல
இல் முடையோர்களை[1] ஆசாரம் செய்து
கோமான் கிருபை யுண்டாக்கும் — நல்ல
குணமான நன்மைக் குறித் தெடுப்பீரே

8. அஞ்சுத் தொழுகையும் அஞ்சி — நல்ல
அழகா இறுத்து ஜகாத்துகள் செய்து
மஞ்சி யாய்[2] நோன்பு பிடித்து — நல்ல
மணமாக ஹஜ்ஜுக்குப் போய் வருவீரே

1. இல்முடையோர்களை — கல்வி கற்ற மேதைகளை
2. மஞ்சியாய் — அழகான முறையாய்



9. வெண்மை ஒளுவை நன்றாக — நல்ல
வடிவாய் முகித்துத் தொழுதுகொண்டோர்க்கு
தம்மை பிழை போகுமென்ன — நல்ல
தக்கோன் நபி இர ஸூலுரைத்தாரே

10. வன்மைத் தொழுகை தனக்கு — நல்ல
வடிவாக உண்டு பருளும் ஷருத்தும்
செம்மை யாய்க் கேட்டு வறிந்து — நல்ல
சிறப்பாக நீங்கள் கொடு வருவீரே

11. உண்மை அவ்வல் தக் பீரும் — நல்ல
உயர்ந்த நிலையும் உம்முல் குர்ஆனும்
தன்மைத் தனமாய் ருகூவும் — அதில்
தரிப்பும் இஃதிதாலும் அதில் தரிப்பும்

12. செம்மை ஸுஜூதும் தரிப்பும் — நல்ல
சிறப்பான இடையி லிருப்பும் தரிப்பும்
பின்பு இரண்டாம் ஸுஜூதும் — அதில்
பேணும் தரிப்பும் இனும் பின்பு கேளீர்

13. அன்பான அத்தஹிய்யாத்தும் — நல்ல
அதனில் இருப்பும் அரசர்நபிக்கு
இன்பமுள்ள ஸலவாத்தும் — சொல்ல
இதனில் இருப்பும் இயம்பும் ஸலாமும்

14. துன்ப மில்லாத ஸலாமில் — நல்ல
துய்தா மிருப்பும் ஸலாம் சொல்லும் போது
பண்பாய்க் கருத்தில் நினைப்பும் — நல்ல
பாங்காந் தொழுகையில் நின்றுபுறத்தி

15. திருத்தப் புறப்பட்டே னென்று — அங்கு
சிந்தை நினைவதும் சேர்தர்த்தீபும்
உரத்த மனங்கொண் டறிந்து—எல்லாம்
உடையோனை நாடித் தொழுது கொள்வீரே

நேரம் அறிவதும் இன்னும் — நல்ல
நெறியாம் கிபுலாவை நேரிடுவதும்
சீராகத் துய்தாய்இருப்பும் — நல்ல
சிறப்பாம் தொழுகை கபூலாகும் கண்டீர்

வெளுக்கும் முன்னே நல்ஸுபுஹை — நாடி
விரைந்து தொழாதோர் கியாமத்து நாளில்
வழுக்காம் ஸிராத் ததன்மேலே — நடக்க
மாட்டார்கள் வெந்தீயில் வீழ்வர் கண்டீரே

வெள்ளி தவத்தை விடாதே — பொல்லா
வினைதீர்க்கும் நல்ல ழுஹரவை விடாதே
கொள்ளி எரியைத் தடுக்கும் — நல்ல
கூபான[1] இரவின் தொழுகை விடாதே

பாவ மடங்கலைப் போக்கும் — நல்ல
பார ஸலாத் தஸ்பீஹை விடாதே
ஏவல் தவத்துக்கு முன்பின் — நன்மை
இலங்கிடும் ஸுன்னத்துத் தொழுகைவிடாதே

பெருநாள் தொழுகை விடாதே — வானின்
பிறையாலே மங்கல்[2] தொழுகை விடாதே
கருதித் தொழுது வருவாயே — நல்ல
கனதி ஒளுவின் தொழுகை விடாதே

1 சிறப்பான. 2. கிரகணம்.



பள்ளித் தொழுகை விடாதே — நல்ல
பாங்கான தாம்இஸ்தி காரா விடாதே
தெள்ளிமை யாக்கிடுந் தவ்பா — மிக்கச்
சிறப்பாந் தொழுகை தனையும் விடாதே

ஸுபுஹுத் தொழுகைக்குப் பின்னே — வல்ல
தூயோனை திக்ருகள் செய்து பரிதி
கவுஸென்னும் வில்மட் டுயர்ந்தால் — உள்ளில்
கருதி இஷ்ராகு நீ தொழு வாயே

இறையோன் முன் நிற்கிறேன் என்று — நல்ல
இதயங்குளிர்ந்து முஸல்லா வைப்பார்த்து
குறையேது மில்லானை நாடி — நல்ல
குணமாய்த் தொழுது களித்திருப் பாயே

துனியாப்[1] பராக்கில் உன் நெஞ்சை — சற்றும்
சூட்டாமல் ஷுஃலன்றி[2] உள்ளச் சத்தோடு
கனியான ஆதி அல்லாவை — என்றும்
கருதித் தொழுதால் கபூலாம்[3] கண்டாயே

தொழுகை ஸுவர்க்கப் பதிக்கு — ஏற்ற
திறவு கோலாமென்றும் தீனின்தூணென்றும்
ஒளிவாம் புருக்குப்[4] பரிமேல் — உயர்
அண்டங்கள் சென்ற குருநபி சொன்னார்

வரிசைத் தொழுகை இல்லாதோர் — பொல்லா
வடுவான காபிர்க ளாகுமென்றே நம்
குருவான குருசில்[5] நயினர் — நல்ல
குணமான யார்க[6] ளுடன் கூறினரே

1. உலகம். 2. வேறுபராக்கு இன்றி. 3. ஏற்கப்படும். 4. மின்வேக வாகனம். 5. மாமேதை. 6. தோழர்.

ஜக்காத் திறுக்காத உடமை — நாளைத்
தீரும் கியாமத்தில்[1] பாம்பாக வந்து
துக்கமாய்க் கண்டத்திற் பூண்டு — பொல்லாத்
துட்டர் கழுத்தைத் துணிக்கும் கண்டீரே

தானம் கொடுப்ப திறைவன் — வன்னித்
தழலாம் முனிவையும் தம்மை சாவையும்
தான முடன் தட்டுமென்ன — வல்லோன்
சமுகந் தனிற்போய் வந்தோ ருரைத்தாரே

ரமழானில் ஒருநோன்பை விட்டோர் — நல்ல
நெறியாக நீள்காலம் நோன்பு வைத்தாலும்
சம மாகி டாததற் கென்ன — எங்கள்
சங்கை நபிஇர ஸூலுரைத் தாரே

வாரம் அறபாவில் நோன்பு — நல்ல
வாகாய்ப் பிடிப்போர்க்கு முன்பின் ஓராண்டின்
பாவம் பிழை தீருமென்ன — எல்லாம்
படைத் தோனைக் கண்ட நபி பகர்ந் தாரே

ஹஜ்ஜுக்குப் போக மாலுள்[2] ளோர்—வாழ்வில்
கருத்தாக ஹஜ்ஜுசெய் யாம லிருந்தால்
கச்சா[3] நஸாராணி போலே — மாறிக்
கபுறில் விழுவா ரென உரைத்தாரே

வாகாய் முழுக்கை இருத — பொல்லா
வம்பான தோஷி யுடைய கபுறில்
ஏகன் அருட்படி நின்று — அங்கே
என்பை[4] நெறுக்கிடக் கண்டது உண்மை

1. மறுமை. 3. பச்சை [அசல்]
2. செல்வம். 4. எலும்பை.



முடியால் ஒருமுடி நீரால் — செய்யும்
முழுக்கில் நனையா திருக்கில் அதாலே
கொடிய எரிதீ யுட்சென்று — மெத்தக்
குடையு மெனநபி கூறல் செய்தாரே

வாகாய் ஹலாலுடன்[1] சேர்ந்து — நல்ல
மணமாந் தொழுகை களாவாகு முன்னே
வாகனை அஞ்சிக் குளித்தால் — நீரின்
வடிவாய் ஒருதுளிக் கோர்வடு போமே.

கதிரோ னுதிக்கும் அளவும் — நல்ல
கருத்தாய் முழுக்கை இரு மட வார்க்கும்
கருதி இருக் கணவோர்க்கும் — வல்ல
கத்தோன வனின் லஃனந்[2] துண்டாமே

அபத்துள் அபவரை மட்டு — சற்று
அமைந்தால் அல்லது மணி ஹயிளாலும்
ஸிபத்து பிள்ளைத் துடக்காலும் — இங்கே
சேரும் முழுக்கென்று ஷெய்குகள் சொன்னார்

முழுக்கில் மூன்று பருளுண்டு — அதில்
முன்னில் நஜீஸைக் கழுவதும் பின்பு
அழுத்தமுள்ள நற்கருத்தும் — மேனி
ஆகமுழுதும் நந்நீரால் நனைப்பும்

உடம்பில்[3] இவர்கை படாமல் — தூய
ஒழுவை முறிக்குங் கருமம் செய்யாமல்
அடவாய்[4] முழுக்கை இறுத்து — நல்ல
அன்பாய்த் தொழல் ஜாஇ ஸாகுமென்றாரே

1. மனைவியுடன். 3. அபத்தில்
2. சாபம். 4. முறைபோல்.

வாய்நாசி முந்திக் கழுகல் — மிக்க
வடிவா யடங்கலும் நீர்கொண்டு தோய்த்தல்
துய்ய ஹனபிக் கிம்மூன்றும் — நல்ல
துலங்கும் பர்ழெனச் சொல்லுரைத் தாரே

ஒழுவில் அறு பருளுண்டு — அதில்
உள்ளார் கருத்தும் முகம்கழுவுதல்
நலமாய் இருகை கழுகல் — தலையில்
நல்ல மஸ்ஹும் கழல்தோய் அடவும்

காற்றுப் புறப்பட்ட தாலும் — அகங்
கையா லபந்தன்னைத் தொட்டதனுலும்
ஏற்ற நிகாஹ் செய்ய ஆகும் — நல்ல
இனியோரைத் தொட்டத னுல்ஒழுத் தீரும்

புத்தி கழன்றுபோனுலும் — நல்ல
பூணும் செம்மையிருப் பின்றியே சாய்ந்து
நித்திரை கொண்டும் முறியும் — நல்ல
நினைவா யிருந்து நடந்துகொள் வீரே

ஈனக் குபிரை விளைக்கும் — கெட்ட
இழிவாம் கருமத்தை நல் முஸ்லீம்கள்
தானத் துடனே அறிந்து — நாளுந்
தருமாய் தவிர்த்து ஒழுகிக் கொள்வீரே

கெட்ட குப்பார்களைப் போலே — பொல்லாக்
கீர்த்திக் கென வேடிக்கை கலியாணம்
நட்டம் விளைத்திட வேதான் — வல்ல
நாயன் முனிவாகச் செய்ய வொண்ணுதே



பச்சை போட்டுப் பந்தல்கட்டி — அங்கே
பரிவாக ஆணும்பெண் ணும் ஒக்கக் கூடி
கச்சா கராபுகள் போலே — வீணில்
கலந்து திரிதல் முறையல்ல கண்டீர்

வாணம் வெடி நாகசினம்[1] — பொல்லா
வடுவான கொட்டு முரசுக ளெல்லாம்
வாணுமென நல்லபேர்கள் — தங்கள்
வாயால் தடுத்து ஹறுமெனச் சொன்னுர்.

வீணில் உடமை களைய — திட்டம்
வேண்டாமென இறை வேதத்தில் சொன்னுன்
பேணிக் கொள் ளாமல் இவ்வீணில் — இங்கே
பிரிப்போ ருடமையைக்கேடர்க ளென்ருன்

வாணும் உடமையை வீணில் — இங்கே
வடுவா யழித்திட வேண்டாம் நல்லோரே
வாணுள் உடலில் புகும்நாள் — பொல்லா
வடுவா யழிப்பவர் வன்னிசேர்வாரே

வெள்ளிப் பகலில் பள்ளியில் — நல்ல
விரும்பி நிகாஹு முடித்துப் பரிமேல்
தெள்ளிதாய் வைத்தூரு சுற்றி — நல்ல
சிறப்பாம் இஷாபின் துணையுடன் சேர்ப்பீர்.

பந்தக்கால் நாட்ட அமைத்தால் — மிக்க
பாங்காக வேகையளிக்க அழைத்தால்
இந்தக் கருமம் இவைபோல் — பொல்லா
இழிவாங் கருமத்துக் கேக நீ வேண்டாம்

1. நாதசுரம்

புருஷன் அழைப்பை மறுத்த — கெட்ட
பெண்சாதி மாருக்கு லஃனத்து என்று
வரிசை யுடைய நயினார் — நல்ல
மணமாம் மணிவாய் மலர்ந்துரைத் தாரே

ஒருவர்க் கொருவர் ஸுஜூது — இங்கு
உகப்பா இடலாமெனில் நன்மடந்தை
கருதிக் கணவர் தமக்கு — நல்ல
கனமரம் ஸுஜூதிடல் ஆகுமென் றாரே

புருஷன் படுக்கைக் கழைத்தால் — உள்ளம்
பொருந்தாத பூவை தனக்கிறை கோபம்
கருதி வருமென்று எங்கள் — வள்ளல்
கனக நபிநயினார்நவின் றாரே

கணவன் முகத்திற் கறுப்பு — இங்கே
காட்டும் பெண்ணார்களின் மேலிறை கோபம்
நினமுருகி வீழும் அன்னாளில் — அங்கே
நீடி வருமென நீதர் சொன்னாரே

உடலைத் தலைவன் தனக்காய் — நல்ல
உவப்போ டலங்கரி யாமடவார்க்கு
படலை அநாபு[1] அன்னாளில் — வந்து
பரிவாய் அணைவது உண்மை கண்டீரே

சுருமா இடாமட வார்க்கும் — தண்மை
துலங்கும் மருதணி தோய்ந்திரியார்க்கும்
மருமா[2] முடியா மங்கைக்கும் — இறை
மன்னன் முனிவென வழுத்தல் செய்தாரே

1. விரிவான வேதனை. 2. கூந்தல்.



புருஷன் மகரை ஹயாத்தில் — மனம்
பொருந்தி இழந் தோர்க்கு அர்ஷு நிழலென்
வரிசை ஹதீதை யுணர்ந்த — நல்ல
வாகான வேதஉல மாக்கள் சொன்னாரே

அடிசில் கறிகள் சமைத்து — மிக்க
ஆசாரமாகத் துணைவர்க்களித்து
அடிபணிந்து நின்று பார்க்கும் — பண்பில்
அழகான காந்தைக்கு சொர்க்க சோபனம்

சீப்பிட்டுக் கோரி முடித்து — நல்ல
சிங்கார மாக அலங்கரித் துப்பின்
கோப்பாய் மகிழ்ந்து மருவி — சிந்தை
குளிர ஜிமா பேணிக் குளித்தோர்க் கீடேற்றம்

மோகம் கொண்டு முகம் நோக்கி —மிக்க
முடுகி அணைக்கக் கரத்தை வலித்தால்
போகம் அணையுமுன் பாபம் — இங்கே
போகுமென நபி போற்றல் செய்தாரே

ஒட்டைத் திமிழ் போலே கொண்டை—தலைமேல்
உசத்தி முடிந் துடல் சாய்த்துக் குலாவி
கெட்ட நடையாய் நடப்போர் — நாளைக்
கீழாம் நரகத்தில் வீழ்வார் கண்டீரே

சட்டை யணிந்து இராமல் — தங்கள்
தடிமார்பைக் காட்டித் திரிகின்ற பேர்க்கு
கட்டை போல் பாம்பவள் மார்பில்—நாளைக்
கடித்து உறிஞ்சுவதுண்மை கண்டீரே

கலியாண வீட்டிற் புகுந்து — அங்கே
களித்து விளையாடும் கன்னிமடந்தை
அலியார் தலைவி முகத்தை — மேலாம்
அன்னுள் தரிசிக்க மாட்டார் கண்டீரே

குறிகே டணுகும் குறிகள் — பொல்லாக்
குறத்தி பட்டரிடம் கேட்கின்ற மாதர்
முறியா தெரிகின்ற தீயில் — நாளை
முந்தி விழுகுவதுண்மை கண்டீரே

ஆகாத புகையிலை தன்னை — சின்ன
ஆடவர் கோசங்கள் போலே சமைத்து
மோகமாய்க் கொள்ளும் மனிதர் — பொல்லா
மூதேவி தன்னிலும் கேடான பேரே

காதுவடித்துப் பொன் போட்டு — கெட்ட
காபிர்கள் போலாய்த் திரிகின்ற நாரி
ஏது அதாபு படுவாள் — நாளை
எரிதீச் சலாகை[1]யைக் காதில் விடுவார்.

குரல்விட்டு ஒப்பாரி சொல்லி — சேர்ந்து
கூகூ வெனக்கொண்டு கூடியழுவோர்
எரியில்விழுந்து விசனம் — நாளை
ஈடுபடுவது உண்மை கண்டீரே

மூக்கைத் துளைத்துப் பொன்போட்டு — பொல்லா
மோச மணுகிய மூதேவி யானோர்
மூக்கை இழுத்து அன்னுளில் — வானோர்
முனிவாம் நரகத்தில் வீழ்த்திடு வாரே

1. ஈட்டி.



காலிற் சிலம்பு பாடகம் — நல்ல
கனமாகப் போட்டு வெளியில் திரிவோர்
மேலாம் கியாமத்து நாளில் — பொல்லா
வினையாம் நரகத்தில் வீழ்வர் கண்டீரே

முன்தாங்கி பீலிகள் பூண்டு — இங்கே
மோச நடையாய் நடக்கும் மகளே
முன் தாங்கி உம்பர் நரகில் — நாளை
முந்த விழுத்தாட்டு வார்கள் கண்டீரே

கணுக்கால் தெரியக் கலைகள் — இங்கு
கருத்தா யுடுத்து நடக்கின்ற கோதை
பிணைக்காய்ப்[1] பிணைநின்ற தூதர் — எங்கள்
பெருமான் மகள்முகம் காணமாட்டாரே

பூவையர்க் கன்னம் கலைகள் — உள்ளம்
பொருந்தக் கொடுத்துப் புறத்தில் விடாமல்
பாவையை வீட்டில் வைப்போர்க்கு — நல்ல
பாரவியன்பதி[2] யின் சுகம் மெய்யே

பொல்லாள்[3] அசட்டுக் குணத்தை — இங்கு
போட்டுப் பொறுத்து நடந்து கொண்டோர்க்கு
நல்லார் அய்யூபு நபிதம் — நன்மை
நலவுண் டெனநபி னுருரைத் தாரே

பொய்ப்புவி வாழ்வை நம்பாதே — துங்க
புறுகான் மறையின் முறை தவருதே
பொற்பதி[4] வாழ்வை விடாதே — நன்கு
புகுதும் ஒளிஉன் கபுரில் என் தோழி

1. மானுக்காக.
2. மறுமை.
3. பொல்லாத மனைவி.
4. சுவனம்.

எளியோர்க்கு ஆசாரம் செய்து — உள்ளம்
இனிதா யிருப்பது நாளை மேலாகும்
தெளிவான சொற்க வல்லிக்கு — நல்கும்
சிறப்பாம் மஹறெனா ஷெய்குரைத்தாரே

ஆதிக்கு ஈமான் கொள்வாண்டி — நல்ல
அழகாய் நபியின் ஒழுங்கு தப்பாண்டி
ஓதித் தொழுது கொள்வாண்டி — உள்ள
உடமை தனக்கு ஜகாத் திறுப்பாண்டி

நீதியாய் நோன்பு வைப்பாண்டி — நல்ல
நெறியாக ஹஜ்ஜை நிறப்பல் செய்வாண்டி
வேதியர்[1] சொல்லைத் தட்டாண்டி — பொல்லா
வினைசேர் புவியின் சுகம் விடுவாண்டி

எளியோர்க்கு அன்னம் ஈவாண்டி — ஆடை
இல்லார்க் குடுக்கக் கலைகொடுப் பாண்டி
மொழியா லுண்மை பேசுவாண்டி — நல்ல
மூத்தோர் தமக்குப சாரம் செய்வாண்டி

கத்தோனை நாடல் செய்வாண்டி — கல்வி
கற்றோ ரிடத்தில் அறிவெடுப் பாண்டி
வித்தார மாய் நடப்பாண்டி — வல்லோன்
மேலாம் கழாவைப்[2] பொருந்தல் செய்வாண்டி

நெறிமன்று தனிற் செல்லுவாண்டி — நங்கை
நிஸ்வானைக்[3] கார்த்து மனையில் வைப்பாண்டி
கிறுபை யணிந்திருப்பாண்டி — அண்டிக்
கெஞ்சும் மிஸ் கீன்களுக்கிட்டு உண்பாண்டி

1. மறைபுணர்த்தோர்.
2. இறைநியதி.
3. பெண்களை.



குர்ஆனை ஓதல் செய்வாண்டி — நல்ல
குணமாய்க் குளிர்ந்து நடந்துகொள்வாண்டி
அறிவின்மேல் தேட்டங் கொள்வாண்டி — தனது
ஆசானை நல்லுப சாரம் செய்வாண்டி

விசுவாச மாய் நடப்பாண்டி — கண்டு
மேவி விசாரித்துப் பின்செய்கு வாண்டி
குஷியாய்[1] வணக்கம் செய்வாண்டி — தனது
குடல்வாய்ஜனத்[2] தோடு உறவாடு வாண்டி

பசியால் மெலிந்திருப் பாண்டி — என்றும்
பள்ளி தனிற்கல்பு[3] சார்ந்திருப் பாண்டி
முஸ்லீமை யாதரிப் பாண்டி — தனது
முன்னோர் மவுத்தான தைநினைப் பாண்டி

அல்லாஹ்வை திக்று[4] செய்வாண்டி — நாளும்
அல்லில் முனாஜாத்து[5] செய்திருப் பாண்டி
நல்ல ஐந்தும் தொழுவாண்டி — மிக்க
நலமான தான ளுஹாத் தொழுவாண்டி

வல்லானை நாடி அறபா — நாளில்
வன்மையுள்ள நோன்பு தான் பிடிப்பாண்டி
பொல்லாப் பிழைகள் கழிய — மிக்க
போற்றலின் ஆஷுரா நோன்புவைப் பாண்டி

வரிசை ரஜபு ஷஃபான் — மிக்க
வன்மை மிகுந்த முஹர்ரம் இவையில்
பிரிசமாய் நோன்பு வைப்பாண்டி — தக்க
பேறுள்ள அய்யாமிலும்[6] பிடிப்பாண்டி

1. மகிழ்வாய்.
2. உறவினர்.
3. உள்ளம்.
4. நினைத்துத் துதித்தல்
5. இறைபால் இரதல்.
6. குறிப்பிடப்பட்ட நாட்களிலும்

கருதித் திங்கள் பிடிப்பாண்டி — நல்ல
கமிஸுக் கிழமையி லும்பிடிப்பாண்டி
பெரிய பெருநாளின் முன்பில் — உள்ள
பெருமை மிகும் ஒன்ப தும்பிடிப்பாண்டி

நன்மைக் குள்ளாய் நடப்பாண்டி — கெட்ட
நாற்ற மிகுத்திடும் தீதுசெய் யாண்டி
தின்மை ஷிருக்குச்[1] செய்யாண்டி — கெட்ட
தீங்காம் கொலை அனி யாயம் செய்யாண்டி

கன்ம ஜுனு[2] விடுவாண்டி — பாவக்
கனமாம் பலிசைத் தொழில் புரியாண்டி
இம்மையில் ஒத்தி வையாண்டி — பொல்லா
ஈனம் மிகுந்திடும் வட்டம் கொள்ளாண்டி

செவ்வையாய் அன்னை பிதாவை — என்றுந்
தீங்கா யுதாசீனப் பேச்சுரையாண்டி
ஒவ்வாத பொற்தொழில் தன்னை — இந்த
உலகில் தவிழ்ந்து ஒழுகிக் கொள்வாண்டி

பஞ்சம் மிகுந்திடும் நாளில் — நல்ல
படைப்பின் தவசத்தைக் கட்டிச் சிறுக
கொஞ்சங் கொஞ்சமாய் வில்லாண்டி — ஏற்றுக்
கொண்ட அமானத்நில்[3] கேடுசெய்யாண்டி

மட்டுக்குச் செட்டு செய்யாண்டி — நாவால்
மொழிந்த உறுதிக்கு மாறுசெய்யாண்டி
கட்டுரை யாகப் பிறர்முன் — இங்கு
கனமான சத்தியம் ஆணைசெய் யாண்டி

1. இறைவனுக்கு இணைவைத்தல் களவு.
2. விபச்சாரம்.
3. அடைக்கலப் பொருள்.



பெற்றோர்க் கடிபணி வாண்டி — கொண்ட
பெண்சாதி பிள்ளைக்குச் சோறளிப் பாண்டி
உற்றோர்க்கு நன்மைசெய் வாண்டி — அன்பாய்
உடன்பிறந் தோருக்கு உதவிசெய் வாண்டி

கஞ்சாப் புகையருந் தாண்டி — பொல்லாக்
கள்ளர் தின்னும் அபின் தின்னமாட் டாண்டி
நஞ்சு வெறிதரும் கள்ளு — இன்னும்
நாற்றமுள்ள மஃஜூன்கள்[1] தின்னுண்டி

வஞ்சனை மாயஞ் செய்யாண்டி — கெட்ட
வஞ்சியர் சொல்லை மறுத்திருப்பாண்டி
வஞ்சம் சதிகள் செய்யாண்டி — தனது
வாயால் புரட்டுப் புறங்கள் செப்பாண்டி

அஞ்சும் கெடும்பு சொல்லாண்டி — மிக்க
அழுக்காங் குணமுள பொய்யைச் சொல்லாண்டி
கெஞ்சும் பக்கீரைத் தள்ளாண்டி — பொல்லாக்
கீர்த்திக் கென அமல் செய்திரியாண்டி

பட்டுக் கலை உடுக்காண்டி — பொல்லாப்
பழிப்பான பூணுத ஆழி பூணுண்டி
திட்டு வசைகள் செய்யாண்டி — மெத்த
தீங்காங் கருமங்கள் தூஷணிப்பாண்டி

அறிவோரைக் கேடு[2] சொல்லாண்டி—அண்டை
அயலாரை நோக அதமம் செய்யாண்டி
நெறிசேர் கல்வி மற வாண்டி — நாளும்
நிலமேல் பித்அத்[3] செயல்கள் செய்யாண்டி

1. போதைப்பொருள்.
2. கேடுண்டாக்கும் புதுமை.
3. மார்க்கத்திலில்லாத நூதனச் செயல்.

அறிவு படிக்கக் கோணுண்டி — நல்ல
ஆய்ந்தோர்க் களிக்க பகி[1] லடையாண்டி
வெறியான கோபங் கொள்ளாண்டி — பொல்லா
வினைசேர் தலைமை வெறுத்திருப் பாண்டி

கிழவிப் பெண் காக்கவை யாண்டி — தட்டுங்
கிண்ணரம் நாதரசு ரங்கள் கேளாண்டி
அளவினில் மோசம் செய்யாண்டி — நெஞ்சில்
அதிகப் பெருமை கெடும்பு வையாண்டி

ஆதிக்கு ஈமான் கொள்வாடி — வள்ளல்
அரசாம் நபிக்கு வழிப்படு வாடி
காதில் தமர்கள் செய்யாடி — கொண்ட
கணவன் தனக்கு மருந்து செய்யாடி

தீதை வெறுத் திருப்பாடி —கெட்ட
செயலாம் களவுகள் செய்திருயாடி
கோதைக ளோடு கூடாடி — நெஞ்சம்
குளிர்ந்து ஒழுகிந டந்துகொள் வாடி

ஆகாப் புரட்டுரை யாடி — மிக்க
அய்பான[2] பொய் புறம் கோளுரை யாடி
சாகாஸ்[3] தனை யஞ்சுவாடி — தூய
சங்கை மறையின் முறை பற்றுவாடி

கூகூ வெனத் திரியாடி —ஓங்கிக்
குரலோசை யாக ஒப் பாரி செய்யாடி
போகம் கரையில் செய்யாடி — கொண்ட
புருஷன் தனக்கு வஞ்சகம் செய்யாடி

1. கஞ்சத்தனம். 3. இறைவன்.
2. அருசையான.



பாதை தனி நடவாடி — அஞ்சிப்
பதறப் பயல்மக வையடி யாடி
வாதை வசை யுரையாடி — மற்ற
வல்லான் படைப்பையும் வைதிரியாடி

பேதைக்கு நன்மை சொல்வாடி — கெட்ட
பேதக வாளிகள் போன்றி ரியாடி
தூதை[1] யுகந்திருப் பாடி — வல்ல
துய்யோனை இரவில் தொழுதுகொள்வாடி

வாகாய் முழுக்கிறுப் பாடி — துய்ய
வன்மை ஒழுவையும் நன்குசெய்வாடி
வாயால் ஹறும்கள்[2] தின்னடி — பொல்லா
வட்டி தனக்கு முதலளியாடி

நாகந் தனைக் கொல்லுவாடி — நஞ்சாம்
நட்டுவை பூரான் தேளுங்கொல்லுவாடி
கூடைக் குணங்கள் கொள்ளாடி — நல்ல
குரலோசை காட்டிக் குரவை யிடாடி

கடலாறு குளத்திற் செல்லாடி — மற்றோர்
காணத் தன்காலிற் சிலம்பணியாடி
மயல்[3] கொண்ட பேர்போ லாடாடி — வாழும்
மனையில் குறுஞ்செட்டு களவு செய்யாடி

உடலைக் கணவன் இல்லாமல் — மெத்த
ஊத்தை யகற்றி அலங்கரியாடி
குடலில் மதுவைக் கொள்ளாடி — இன்னுங்
குறிகெட்ட புகையிலை தன்னை இடாடி

1. நபிகளை. 3. உன்மத்தம்
2 விலக்கப்பட்ட உணவுகள்

கறையாடை தன்னை வண் ணான்பால் — இங்கு
கழுவக் கொடுத்து ஹயாக்[1] கெட் டிடாடி
முறைகெட்ட மன்றி லேருடி — பொல்லா
முனிவாஞ் செயல்க ளெல்லாம் விடுவாடி

மறைவின்றி நீருக் கிராடி — ஆதி
மறையின் படியுறை உள்ளிருப்பாடி
இறைபால் தவக்கல்[2] செய்வாடி — தனது
இதயத்தில் கெட்ட கெடும்பு வையாடி

தன்னை மதித்திரியாடி — உடலில்
சட்டை யிடாமற் தரித்திரி யாடி
என்னை விடென்று சொல்லாடி — மார்க்க
இஸ்லாம் ஒழுங்கைத் தவறல் செய்யாடி

பின்னை[3] நினைத்திருப் பாடி — வல்ல
பெரியோன் தனக்காய் அமல் செய்கு வாடி
பொன்னை இல்லார்க் களிப்பாடி — தனது
புதையங்கத் தை[4] வீட்டிற் புதைத்துக்கொள்வாடி

சொர்க்கத்தில் சேர்க்கும் நலவை — என்றுஞ்
சறுகாமற் பேணிக் கொடுவரச் சோதி
ஹக்காகவே நல்லுதவி — இங்கு
கனமாகச் செய்ய இறைபாலிரப்பீர்

அல்ஹம்து லில்லாஹி கொண்டும் — வேத
அரசர்நபி ஸல வாத்துரை கொண்டும்
வல்லாலி வஸ்ஸஹ் பிக்கும் — உள்ளால்
உகப்பாய் ஸலவாத் துரைத்து எளியேன்

1. வெட்கம்
2. அடைக்கலம்.
3. மறுமையை.
4. மறைக்கக் கூடிய உறுப்புகளை.



நவ்லானந் தக்கலிப் பாவை — இங்கே
நலமான ஆதி யருளின் படியே
சொல்லா லுரைத்து முடித்தேன் — சங்கை
துல்ஹஜ்ஜு யவ்முல் கமீஸு தலாதில்

அன்னை பிதாக்கும் அதன்பின் — நல்ல
அழகான அன்பின் உடன்பிறந் தோர்க்கும்
மன்னர் நபிதம் மன்ருட்டம் — நாளை
மறுமை தனிற்பெற நல்கு இலாஹீ

(ஆமீன்)



மீலாது பிரிண்டர்ஸ், திருநெல்வேலி-6.